# திருப்புகழமிர்தம்





ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சௌமிய

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

புரட்டாசி

ௐ

## புதிய வெளியீடுகள்

**1. கட்டுரைக் கனிகள்**

பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முக்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—10.

**2. கற்புக் கனிகள்—முதற் புத்தகம்**

கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20.

**3. கற்புக் கனிகள்—இரண்டாம் புத்தகம்**

கற்புக் கதைகள் கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00.
தபாற் செலவு 0—20

### சந்தா நேயர்களுக்கு

திருப்புகழமிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16ந் தேதி (அன்று விடுமுறையானல் அடுத்துவரும் விடுமுறையில்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16ந் தேதி யளவில்தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25ந் தேதிவரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதாமாதம் ஒழுங்காகக் கிடைக்கப்பெருத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பது வரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

### திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | |
|---|---|
| இந்தியா, இலங்கை | ரூ. 3—50 |
| மற்ற நாடுகள் | ரூ. 5—50 |

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 34 | சௌமிய ஹூ—புரட்டாசி மீ
செப்டம்பர் 1969 | இதழ் 6

## திருப்புகழ்

### திருவருணை

கெஜநடை மடவார் வசமதி லுருகா
கிலெசம துறுபாழ் வினையாலே
கெதிபெற நினையா துதிதனை யறியா
கெடுசுக மதிலாழ் மதியாலே

தசையது மருவீ வசையுட லுடனே
தரணியில் மிகவே யுலைவேனோ
சததள மலர்வார் புணைநின கழலார்
தருநிழல் புகவே தருவாயே

திசைமுகன் தனைநீள் சிறையுற விடுவாய்
திருநெடு கருமால் மருகோனே
திரிபுர தகனு ரிடமதில் மகிழ்வார்
திரிபுரை யருள்சீர் முருகோனே

நிசிசர ருறைமா கிரியிரு பிளவா
நிறையயில் முடுகா விடுவோனே
நிலமிசை புகழார் தலமெனு மருணு
நெடுமதில் வடசார் பெருமாளே.

1479—1

## பதவுரை

திசை முகனை=பிரமதேவனை; நீள் சிறை உறவிடுவாய்=நீண்ட சிறையில் புகவிட்டவரே! திரு நெடு கருமால் மருகோனே=அழகிய பெரிய கரிய நாராயணருடைய மருகரே! திரிபுர தகனர்=முப்புரத்தை எரித்த சிவபெருமானுடைய, இடமதில் மகிழ்வார்=இடப் பாகத்தில் மகிழ்கின்ற, திரிபுரை அருள்=பார்வதி தேவி பெற்ற, சீர் முருகோனே=சிறந்த முருகவேளே! நிசிசரர் உறை=அசுரர்கள் இருந்த, மா கிரி இருபிளவா=பெரிய கிரவுஞ்சமலை இரு பிளவு ஆகும்படி, நிறை அயில் முடுகா விடுவோனே=மாட்சிமையுடைய வேலாயுதத்தை வேகத்துடன் செலுத்தியவரே! நிலமிசை புகழ் ஆர்=பூமியில் புகழ் நிறைந்த, தலம் எனும் அருணை=திருத்தலம் என்று பேர்பெற்ற திருவண்ணாமலையில், நெடுமதில் வடசார்=பெரிய மதிலின் வடபுறத்தே வீற்றிருக்கின்ற, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! கெஜ நடை மடவார் வசம் அதில் உருகா=யானையின் நடையையுடைய மாதர்களுக்கு வசப்பட்டு உருகி, கிலெசம் அது உறு=துன்பத்தைத் தருகின்ற, பாழ்வினையாலே=பாழான வினைப் பயனால், கெதி பெற நினையா=நற்கதியைப் பெறுதற்கு நினையாமலும், துதி தனை அறியா=தேவரீரைத் துதிசெய்ய அறியாமலும், கெடு சுகம் அதில் ஆழ் மதியாலே=அழிவைத்தரும் சிற்றின்பத்தில் ஆழ்ந்துபோகின்ற அறிவினால், தசை அது மருவி=சதைகொண்டதும், வசை உடல் உடனே=பழிப்புக்கு இடமானதும் ஆன இந்த உடம்புடன், தரணியில் மிகவே உலைவேனோ=பூமியில் மிகவும் அலைவேனோ? சததள மலர்=நூற்றிதழ்த்தாமரை போன்றதும், வார் புணை=பிறவிப் பெருங்கடலைக் கடத்தும் நீண்ட தெப்பம் போன்றதுமான, நின கழல்=உமது திருவடிகள், ஆர் தரு நிழல் புகவே தருவாயே=நிரம்பத்தருகின்ற நிழலில் அடியேன் சேருமாறு அருள் தருவீராக.

## பொழிப்புரை

பிரமதேவனை நீண்ட சிறைச்சாலையில் அடைத்து வைத்தவரே! அழகிய பெரிய கரிய திருமாலின் திருமருகரே! திரிபுரத்தை எரித்த சிவபெருமானுடைய இடப்பாகத்தில் மகிழ்ந்திருக்கும் உமாதேவியார் பெற்ற சிறந்த முருகக்கடவுளே! அசுரர்கள் இருந்த பெரிய கிரவுஞ்சமலை இரு பிளவாகச் சிதையுமாறு பெருமை நிறைந்த வேலாயுதத்தை வேகமாக விட்டவரே! இப்பூதலத்தில் புகழ் நிறைந்த திருத்தலமாகிய திருவண்ணாமலையில் திருமதிலின் வடபுறத்தில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! பெண் யானையின் நடையையுடைய மாதர்களின் வசப்பட்டு உருகி, வருத்தந்தருகின்ற பாழான வினைப்பயனால், நற்கதி பெற நினையாமலும், உம்

மைத் துதிசெய்ய அறியாமலும், அழிவைத்தருகின்ற சிற்றின் பத்தில் ஆழ்கின்ற அறிவினுல், சதையுடன் கூடியதும், பழிப் புக்கு இடமானதுமான இவ்வுடம்புடன் பூமியில் வீணே மிகவும் அலையாமல், நூற்றிதழ்த் தாமரை மலர் போன்றதும், நீண்ட பிறவிப் பெருங்கடலைக் கடக்குந் தெப்பம் போன்றது மான உமது திருவடி தரும் நிறைந்த நிழலில் அடியேன் சேரு மாறு அருள்புரிவீராக.

## விரிவுரை

**கெஜநடை மடவார்:—**

பெண் யானையின் நடைபோல் பெண்கள் அழகாக நடப் பார்கள்.

**வசமதிலுருகா:—**

மாதர் வசப்பட்டு, அழலிடைப்பட்ட மெழுகுபோல் ஆடவர் உள்ளம் உருகுவர். மாதர் வசப்பட்டோர் நரகில் வேதனை யடைவர்.

"மாதர் வசமாயுற் றுழல்வாரும்
மாதவ மெணுமற் றிரிவாரும்
தீதகலவோதிப் பணியாரும்
நீ நரகமீதிற் றிகழ்வாரே"

—திருப்புகழ்.

**கிலெசம துறுபாழ் வினையாலே:—**

கிலேசம் என்ற சொல் சந்தத்தை வேண்டி கிலெசம் என்று குறுகிற்று. கிலேசம்—துன்பம். துன்பம் இருவகைப்படும். ஒன்று உடம்புக்கு வருவது; ஒன்று உள்ளத்துக்கு வருவது.

"புந்திக் கிலேசமும் காயக் கிலேசமும் போக்குதற்கே"

என்கின்ருர் கந்தரலங்காரத்தில்.

இடையருது துன்பத்தை விளைவிக்கின்ற பாழும் வினை யில் கிடந்து மாந்தர் உழலுகின்றனர்.

**கெதிபெற நினையா:—**

உய்யும் நெறி இது என உணராது அவலமுறுகின் ருர்கள்.

உய்யும் நெறி எது என்று அருணகிரியார் கந்தரநுபூதி யில் உபதேசிக்கின்ருர்.

"கெடுவாய் மனனே கதிகேள் கரவாது
இடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்"

**துதிதனை யறியா:—**

முருகனை நாவாரத் துதிசெய்ய வேண்டும். முருகனைத் துதித்தவர் உலகந் துதி செய்ய உயர்ச்சி பெறுவர்.

இறைவன் தந்த நாவினுல் அப் பரமனைத் துதி செய்யாதோர் நன்றி மறந்தவராவார்.

**கெடுசுகமதிலாழ் மதியாலே.—**

இறைவனுடன் சேர்ந்து நுகர்கின்றது பேரின்பம்: உலக இன்பங்கள் அணுத்துணையானவை. அழிவைத் தருகின்ற இச்சிற்றின்பத்தில் அமிழ்ந்து அழிகின்ற அறிவு அகல வேண்டும்.

**தசையது மருவீ வசையுடலுடனே தரணியில் மிகவே யுலேவேனே:—**

இந்த உடம்பு வெறும் தசையினுல் ஆனது. மலம் நீர் சீழ் முதலிய அருவருப்புடைய பொருள்கள் நிறைந்தது. நாற்றம் உடையது. ஆன்றோர்களால் பழிக்கக் கூடியது.

இந்த உடம்பைப் பழிக்கின்றார் தாயுமானுர்.

"சுக்கிலமும் நீரும் சொரிமலமும் நாறுமுடல்
புக்குழலும் வாஞ்சையினிப் போதும் என்ப தெந்நாளோ!"
"காக்கை நரி செந்நாய் கழுகொருநாள் கூடியுண்டு
தேக்கு விருந்தாம் உடலேச் சீ என்பதெந்நாளோ"
"நாற்றமிகக் காட்டும் நவவாயில் பெற்ற பசுஞ்
சோற்றுத் துருத்தி சுமை என்ப தெந்நாளோ"
"உருவிருப்ப வுள்ளேதான் ஊறும் மலக்கேணி
அருவருப்பு வாழ்க்கையைக்கண் டஞ்சுநாள் எந்நாளோ"

உடற்பற்றை ஒழித்து, இதனைப் பழித்தநாள் பிறப்பொழியும் நாள் என்று சிவபோக சாரம் கூறுகின்றது.

தன்பெருமை யெண்ணுமை தற்போதமே யிறத்தல்
மின்பெருமையாம் சகத்தை வேண்டாமை—தன்பால்
உடலேத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலேப் பிறப்பொழியும் நாள்.

"ஆனாலும் இந்த வுடம்போடிருப்ப தருவருப்பே" என்கின்றார் பட்டினத்தடிகளார்.

ஆதலால் இந்த இழிந்த உடலுடன் இருக்க விரும்புதல் கூடாது.

**சததள மலர் வார் புணேநின கழல்:—**

முருகப் பெருமானுடைய திருவடி நூற்றிதழ்த் தாமரை மலர் போன்றது. தாமரையில் தேன் துளிப்பதுபோல் முருகன் திருவடியில் கருணை துளிக்கின்றது.

புணை—தெப்பம்.

பிறவிப் பெருங்கடலேத் தாண்டவைக்குந் தெப்பம் போன்றது முருகன் திருவடி.

''உறவுமுறை மனைவிமக வெனுமலையில் எனதிதய
உருவுடைய மலினபவ சலராசி ஏறவிடும்
உறுபுணையும்......சீறடியே''

—சீர்பாத வகுப்பு.

ஆர்தரு நிழல்புகவே தருவாயே:—

ஆர்—நிறைவு.

இறைவனுடைய திருவடி நிறைந்த நிழல் தரும் பெருமை யுடையது. திருவடி நிழல் மிகவும் குளிர்ச்சியானது. திருவடி நிழலின் பெருமையை அப்பர் பெருமான் கூறுமாறு காண்க.

மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

நிலமிசைபுகழார் தலமெனுமருணை நெடுமதில் வடசார் பெருமாளே:—

இப்பூதலத்தில் மிகவும் பெருமையுடைய திருத்தலம் திருவருணை. இது நினைக்க முத்திதரும் மகிமையுடையது.

இப்பாடல், திருவண்ணாமலையில் வடக்கு வீதியில் உள்ள ஆறுமுகப் பெருமானைக் குறித்துப் பாடியது.

கருத்துரை

அருணை மேவும் அண்ணலே! உன் திருவடி நிழலைத் தந்தருள்க.

## திருப்புகழ்

அருக்கார் நலத்தைத் திரிப்பார் மனத்துக்
கடுத்தாசை பற்றித் தளராதே
அடற்கா லனுக்குக் கடைக்கால் மிதித்திட்
டறப்பே தகப்பட் டழியாதே
கருக்காரர் நட்பைப் பெருக்கா சரித்துக்
கலிச்சா கரத்தில் பிறவாதே
கருத்தா லெனக்குத் திருத்தா ளளித்துக்
கலைப்போ தகத்தைப் புகல்வாயே
ஒருக்கால் நினைத்திட் டிருக்கால் மிகுத்திட்
டுரைப்பார்கள் சித்தத் துறைவோனே
உரத்தோ ளிடத்திற் குறத்தேனை வைத்திட்
டொளித்தோடும் வெற்றிக் குமரேசா

செருக்கா தருக்கிச் சுரச்சூர் நெருக்கச்
செருச்சூர் மரிக்கப் பொரும்வேலா
திறப்பூ தலத்திற் றிரட்சோ ணவெற்பிற்
றிருக்கோ புரத்திற் பெருமாளே.

### பதவுரை

ஒருக்கால் நினைத்திட்டு=ஒரு முறை தேவரீரை நினைத்து, இரு கால் மிகுத்திட்டு உரைப்பார்=இருதிருவடிகளையும் மிகுதியாகத் துதிப்பவர்களுடைய, சித்தத்து உறைவோனே=உள்ளத்தில உறைபவரே! உர தோள் இடத்தில்=வலிமை மிகுந்த தோளிலே, குற தேனை வைத்திட்டு=தேன் போன்ற இனிய வள்ளிநாயகியை எடுத்துக்கொண்டு, ஒளித்து ஓடும்=ஒளிந்து ஓடிய, வெற்றி குமர ஈசா=வெற்றி பொருந்திய குமாரக் கடவுளே! செருக்கா தருக்கி=ஆணவங்கொண்டு கர்வம்பூண்டு, சுர சூர் நெருக்கு=தேவர்களாகிய தெய்வத் தன்மையோரை ஒடுக்கிய, அ செரு சூர் மரிக்க=அந்த போருக்கு வந்த சூரபன்மன் இறக்க, பொரும் வேலா, போர் செய்த வேலாயுதரே! திறம் பூ தலத்தில் திரள்=நிலைபெற்ற இப் பூதலத்தில் திரண்டு நிற்கும். சோண வெற்பில்=திருவண்ணமலையில் திரு கோபுரத்தில்=அழகிய கோபுரத்தில் வீற்றிருக்கும், பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! அருக்கு ஆர் நலத்தை திரிப்பார்=அருமை வாய்ந்த உடல்நலத்தைக் கெடுப்பவர்களாகிய பொதுமாதர்களின், மனத்துக்கடுத்த மனத்துக்கு ஒத்த, ஆசை பற்றி தளராதே= ஆசை கொண்டு தளர்ச்சியடையாமலும், அடல் காலனுக்கு=வலிமை மிக்க காலன் உயிரைப்பற்றுதற்கு, கடைகால் மிதித்திட்டு=அடிப்படையைக் கோலி, அற பேதகம் பட்டு அழியாதே= மிகவும் மனம் வேறுபாடு அடைந்து அழியாமலும், கருக்காரர் நட்பை=பிறவிக்கு ஏதுவான செய்கையோரது உறவை, பெருக்க ஆசரித்து=மிகவும் கைக்கொண்டு, கலி சாகரத்தில் பிறவாதே=துன்பக் கடலில் வீழ்ந்து பிறவாமலும், கருத்தால்=தேவரீர் என் மீது திருவுளம் வைத்து, எனக்கு திரு தாள் அளித்து=அடியேனுக்கு உமது திருவடியைத் தந்து, கலை போதகத்தை புகல்வாயே=கலைஞானத்தை உபதேசித்தருளுவீராக.

### பொழிப்புரை

ஒருமுறை உம்மை நினைத்து, இரு திருவடிகளை நிரம்பத் துதி செய்கின்ற அடியார்களின் உள்ளத்தில் உறைபவரே! தேன் போன்ற இனிய வள்ளி பிராட்டியாரை வலிமை மிக்க திருத்தோளில் வைத்துக்கொண்டு மறைந்து ஓடிய வெற்றி பொருந்திய குமாரக் கடவுளே! ஆணவத்துடன் கர்வங்

கொண்டு, தெய்வத் தன்மையுள்ள தேவர்களை ஒடுக்கியும் போருக்கு வந்த சூரபன்மன் மடியுமாறு போர் புரிந்த வேலாயுதரே! நிலைபெற்ற இப் பூதலத்தில் தீயுருவாகத் திரண்டு நின்ற திருவண்ணுமலையில் திருக்கோபுரத்தில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! அருமை வாய்ந்த உடல்நலத்தைக் கெடுக்கும் பொது மாதர்களின் மனத்துக்கு வேண்டிய படி ஆசைகொண்டு தளர்ச்சியடையாமலும், வலிமை மிக்க காலன் உயிரைக் கவர்வதற்கு வேண்டிய அடிப்படையைச் செய்து, அதனால் மனம் மிகவும் வேறுபாடு அடைந்து அழியாமலும், பிறவித் துயருக்கு ஏதுவான செயல் புரிவோருடைய நட்பை மிகவும் கொண்டு, பிறவிக்கடலில் வீழ்ந்து பிறவாமலும், தேவரீர் என்மீது திருவுளம் வைத்து, அடியேனுக்கு உமது திருவடியைத் தந்து, கலை ஞானத்தை உபதேசித் தருளுவீராக.

## விரிவுரை

**அருக்கார் நலத்தைத் திரிப்பார்:—**

அருக்கு—அருமை. இந்த உடம்பை இறைவன் கோயிலாகக் கொண்டுள்ளான். "ஊனுடம்பு ஆலயம்" என்கின்றார் திருமூலர். ஆதலால் இந்த உடம்பு அருமையானது. இந்த அரிய உடல் நலத்தை அறவே கெடுக்குந் தன்மையுடையவர் விலை மகளிர்.

**மனத்துக் கடுத்தாசைபற்றித் தளராதே:—**

விலைமாதருடைய மனத்துக்கு எது விருப்பம் என்று ஆராய்ந்து அதனையே செய்து, அவர்கள்மீது மிகவும் ஆசை வைத்து அதனால் மாந்தர் தளர்ச்சி யடைகின்றனர். மாதராசையால் மடிந்தோர் பலர். சுந்தோபசுந்தர் திலோத்தமையை விரும்பி மாய்ந்தார்கள்.

**அடற் காலனுக்குக் கடைக்கால் மிதித்திட்டு:—**

காலன் என்பவன் இயமனுடைய அமைச்சன். உயிர்களைப்பற்றும் காலம் பார்த்து வருவதனால் காலன் என்று பேர் பெற்றான்.

"காலன் வந்து உயிரைப்பற்றுதற்கு வேண்டிய அடிப்படையைச் செய்கின்றேன்" என்கின்றார்.

**அறப்பேதகப்பட்டழியாதே:—**

அற—மிகுதியாக. மிகவும் மனம் வேறுபட்டு அழிவது. அறநெறியினின்றும் வேறுபட்டு அவலமுறுவர் பலர்.

**கருக்காரர் நட்பைப் பெருக்காசரித்து:—**

கருவிற் சென்று பிறக்கும் வினைகட்கு ஏதுவாக உழலும் அவலருடைய நட்பை மிகவும் பற்றி உழலக் கூடாது.

பெருக்க ஆசரித்து எனப் பதப்பிரிவு செய்க.

**கலிச்சாகரத்தில் பிறவாதே:—**

கலி—துன்பம். துன்பக் கடலில் முழுகி, பிறவியை யடைகின்றனர்.

**கருத்தால்:—**

"முருகா! தேவரீர் இவன் நம் அடியான் என்று திருவுளஞ் செய்தல் வேண்டும்" என்று அருணகிரியார் முறையிடுகின்றார்.

"ஆதார மிலேன் அருளைப் பெறவே
நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே"

—அநுபூதி.

"சுருதியொரு பரமபொரு ளீது என்று என்
செவியிணையில் அருளி"

—(ஒருவரையும்) திருப்புகழ்.

**கலைப் போதகத்தைத் தருவாயே:**

கலைப்போதகம்—கலை ஞானம். "உவமையிலாக் கலை ஞானம்" என்கின்றார் சேக்கிழார்.

பரஞானத்துக்குக் கலைஞானம் ஏதுவாக இருந்து உதவுகின்றது.

**ஒருக்கால்நினைத்திட்டு இருக்கால் மிகுத்திட் டுரைப்பார்கள்
சித்தத் துறைவோனே :—**

ஒருமுறை நினைத்து இரு திருவடிகளைத் துதி செய்தாலும் அந்த அடியார்களின் உள்ளத்தில் முருகன் உறைவான். இது அப் பெருமானுடைய கருணையின் எளிமையை யுணர்த்துகின்றது.

"ஒருகால்நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகா என்றோது வார்முன்"

இரு கால் என்பது சந்தத்தை நோக்கி இருக்கால் என வந்தது.

அன்றி, இருக்கால் என்பது இருக்கு வேத மந்திரத்தால் துதி செய்பவர் எனினும் பொருந்தும்.

"இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்"

—மாணிக்கவாசகர்.

முருகன் திருவடியைத் தியானித்து, துதிசெய்பவர் உள்ளத்தைக் கோயிலாகக்கொண்டு அப் பெருமான் எழுந்தருளி யுறைவான்.

# கற்பு

## மாதேவி

மாதேவி தந்தையாருக்கு ஒரே பெண். அதனல் செல்வமாக வளர்ந்தாள். அடக்கம், பண்பு, அறிவு, ஒழுக்கம் முதலிய நற்குணங்கள் எல்லாம் இருந்தன. அழகு என்ற ஒன்று மட்டும் அவள் பால் அணுத்துணையும் இல்லாமல் போய்விட்டது. அவளுடைய நிறம் உளுந்துக்கு நல்லெண்ணெய் தடவியது போலும், நெருப்புக்கு அபிஷேகம் பண்ணியது போலும் இருக்கும். அவள் முகம் சிறிது விகாரமாகத்தான் இருந்தது. குப்பையில் மாணிக்கம் இருப்பது போல அந்த அழகில்லாத முகத்தில் அன்பும், கருணையும் குடியிருந்தன.

தந்தையார் அவளைப் பள்ளியில் வைத்தார். மாதேவி அக்கரையாகப் படித்தாள். அவள் அறிவு அரம் போன்று கூர்மையாக

---

"நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்" —அப்பர்.

"ஆறெழுத்தை அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே" —கந்தர் கலிவெண்பா.

உரத்தோளிடத்திற் குறத்தேனை வைத்திட் டொளித் தோடும்
வெற்றிக் குமரேசா:—

பக்குவப்பட்ட ஆன்மாவாகிய வள்ளியை ஐம்புலன்களாகிய வேடுவர் கூட்டத்தினின்றும் பிரித்து எடுத்து முருகன் ஆட்கொள்ளும் கருணைத் திறத்தை இது குறிக்கின்றது.

"சோலைதருகானிற் கோலமறமானைத்
தோளிலுறவாகக் கொண்ட வாழ்வே"—(ஆலவிழி) திருப்புகழ்.

சுரச்சூர் நெருக்கு:—
சூர்—தெய்வத்தன்மை.
தேவர்களாகிய தெய்வத்தன்மை யுடையவர்களைச் சூரபன்மன் ஒடுக்கி அடக்கித் துன்புறுத்தினன்.

திறப்பூதலத்திற் றிரட் சொணவேற்பில்:—
நிலைபெற்ற பூதலத்தில் சோதிவடிவாகத் திரண்டு நின்ற திருமலை அருணசலம்.

கருத்துரை

அருணைமேவும் ஐயனே! அடியேனுக்குக் கலை ஞானத்தைத் தந்தருள்.

இருந்தது. மாதேவி தன்முகத்தைக் கண்ணுடியில் பார்க்கும்போதெல்லாம் வெட்கப்படுவாள். கடவுள் நமக்கு அழகு தரவில்லேயே என்று எண்ணி உள்ளங்குன்றுவாள். தன்னுடன் படிக்கும் மாணவியர்களில் அழகிய மாணவிகளேக் கண்டு ஒரு பெருமூச்சு விடுவாள். சில நேரங்களில் அவளுடைய கண் குளமாகிவிடும். எல்லா வகுப்புக்களிலும் முதன்மையாக அதிக மதிப்பெண்களேப் பெற்றுத் தேறினுள். மற்ற மாணவியர்கள் அவளுடைய அறிவுத் திறத்தைக் கண்டு அழுக்காறு கொண்டார்கள். சில பெண்கள் ''இந்தக் கருப்பிக்குக் கடவுள் இத்தனே அறிவைத் தந்திருக்கின்ருரே?'' என்று மெல்லப் பேசிக்கொள்ளுவார்கள். அவளேப் பார்த்து மெல்லச் சிரித்துப் பரிகசிப்பார்கள்.

மாதேவி மங்கைப் பருவம் அடைந்தாள். தந்தையார் ''இனி நீ படித்தது போதும்'' என்று கூறிவிட்டார். மாதேவி தன் தாய்க்குத் துணேயாக வீட்டுவேலேகளேப் பார்த்து வந்தாள். பம்பரம்போல் சுழன்று வேலே செய்வாள். மாலே நேரமானுல் கைகால்களேக் கழுவி, நெற்றியில் வெண்ணீறும், குங்குமப் பொட்டும் இட்டு, விளக்கேற்றி

''தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம
அருள்தாராய்''

என்ற திருப்புகழ் அடியை இனிய குயில் போன்ற குரலில் 'கரகரப்ரியா' ராகத்தில் பாடிப் பணிந்தெழுவாள். கருத்த முகத்தில் வெளுத்த விபூதி மிகப் பளிச்சிட்டு அழகு செய்யும். தாய் தந்தையர்க்கு மகளே நல்ல இடமாகப் பார்த்து கொடுக்க வேண்டும் என்ற கவலே வாட்டியது. கவர்ச்சியாக இல்லாமையால் வந்துபார்க்கின்றவர்கள் மௌனமாகத் திரும்பிவிடுவார்கள்.

மாதேவியின் தந்தையார் மார்க்கசகாய முதலியார் தனது தூரத்து உறவினனுகிய சிற்றம்பலம் என்ற மாணவனேப் படிக்க வைத்தார். அவன் ஒரு நாள் திடீர் என்று மார்க்கசகாய முதலியார் வீட்டுக்கு வந்தான். நன்றியுள்ள அவன் முதலியாரை அன்புடன் அஞ்சலி செய்தான்.

மார்க்கசகாய முதலியார் சிற்றம்பலத்தைப் பார்த்து மிக்க அன்புடன் வரவேற்ருர்.

''அப்பா! சிற்றம்பலம் சுகமா? உன்னேப் பார்த்து வெகுநாட்கள் ஆயின. இப்போது எங்கிருக்கின்ருய்?''

''வணக்கம். நான் பெங்களூரில் ஒரு பெரிய கம்பெனியில் மானேஜராகப் பணிபுரிகின்றேன். மாதம் ஆறு நூறு ரூபாய் ஊதி

யம் கிடைக்கின்றது. என்னைப் படிக்க வைத்து முன்னேற்றமடைய வைத்தீர்கள். என் வாழ்வு மலர்ச்சியடைந்தது. தங்களால் தான் படிப்பும் பணமும் பெற்று பரம சுகமாக இருக்கின்றேன். ஒரு குறையுமில்லை. தங்கள் கருணைக்கு என்றும் நன்றி. தங்களைச் சந்தித்து நன்றி கூறவேண்டும் என்றே வந்தேன்.''

''ரொம்ப சந்தோஷம். இங்கு நான்கு நாட்கள் தங்கிவிட்டுப் போ. அம்மா! மாது! காப்பி கொண்டு வா''

மாதேவி காப்பியைக் கொணர்ந்து மேஜைமீது வைத்தாள். அவளைச் சிற்றம்பலம் பார்த்தான். கவர்ச்சியில்லாத முகத்தில் அறிவும் அடக்கமும் பளிச்சிட்டன. புன்னகை தவழும் முகமும், பொறுமைநிறைந்தவிழியும் உடையவளாக அவள்காட்சியளித்தாள். அங்கு அவர் வீட்டில் அவருடைய விருப்பத்தை மறுக்கமுடியாது தங்கினன்.

மாலை விளக்கு பூஜை செய்து, விளக்குக்கு முன் அமர்ந்து மாதேவி முருகன் திருப்புகழைப் பாடிக் கொண்டிருந்தாள். அந்த இனிய குரல் அவன் உள்ளத்தை உருக்கியது. அவன் மனத்தில் பலப்பல எண்ணங்கள் தோன்றின.

மறு நாள் காலை மார்க்கசகாய முதலியார் சிற்றம்பலத்துடன் தனியே உரையாடிக் கொண்டிருந்தார். ''சிற்றம்பலம்! பெங்களூரில் உனக்கு ஆகார வசதிகள் எப்படி?'' என்று கேட்டார்.

''எல்லாம் ஓட்டல்தான்'' என்றான் சிற்றம்பலம். ஏனப்பா! சிறு வயதில் நீ கல்யாணம் பண்ணிக் கொண்டு குடியுங் குடித்தனமுமாகப் பரம சந்தோஷமாக இருக்கவேண்டாமா? நீ என் சொல்லைத் தட்டமாட்டாய் என்று எண்ணுகின்றேன். நம்ம பெண் மாதேவியைக் கல்யாணம் செய்துகொள். மாதேவி நற்குணங்களுக்கெல்லாம் உறைவிடமானவள். பாங்குடன் நடந்துகொள்வாள்'' என்றார்.

சிற்றம்பலம் ''தாங்கள் இடுங் கட்டளையை சிரமேற்கொண்டு செய்வேன்'' என்றான். ஆனால் அப்படிச் சொல்லும் போது அவன் மனத்தில் ஒரு பெரிய போராட்டம் போல் நினைவுப் புயல் வீசியது. மாதேவி கண்ணுக்கு ரஞ்சகமாக இல்லை. மற்ற குணங்கள் இருக்கின்றன. குணம் முக்கியமா? அழகு முக்கியமா? முள்ளு முள்ளாக உள்ள பலாப் பழத்துக்குள் சுவை மிகுந்த சுளைகள் இருப்பதுபோல் அழகில்லாத இவள் உள்ளத்தில் இனிய குணங்கள் குடியிருக்கின்றன. இவளை மணந்து கொள்ள மாட்டேன் என்றால் நாம் நன்றி கெட்டவனாக ஆவோம். மாதம் மாதம் பணம் அனுப்பிப் படிக்க வைத்தவருக்கு நான் எந்த வகையில் நன்றிக் கடனைத் தீர்ப்பது? அழகில்லாத மனைவி யென்று நம் நண்பர்கள்

பரிகசிப்பார்கள். எது எப்படியிருந்தாலும் உதவி செய்தவருடைய உள்ளத்தை நோகவைக்கக் கூடாது. நன்றி மறந்தவனுக்கு நற்கதி கிடையாது. ஆதலால் நாம் மாதேவியை மணந்துகொள்வதுதான் முறை'' என்று எண்ணி முடிவு செய்தான். தன் சம்மதத்தை முதலியாரிடம் தெரிவித்தான். நெடுநாட்களாக வரன் கிடைக்கவில்லையே என்று வருந்திக் கொண்டிருந்த அவருக்கு ஒரு பெருஞ்சுமை தலையிலிருந்து இறங்கியது போன்ற மகிழ்ச்சி யேற்பட்டது.

அன்று இரவு மனைவியிடம் இச் செய்தியைக் கூறினார். மகளை அழைத்து, ''அம்மா! நம்ம வீட்டில் வந்து தங்கியிருக்கின்றாரே அவர் என்னால் படித்து முன்னுக்கு வந்தவர். சிற்றம்பலம் என்ற பேர் உடையவர். நல்லவர்; கடமையுணர்ச்சி யுடையவர். அவருக்கு உன்னைத் திருமணம் செய்து கொடுப்பதாக முடிவு செய்துளேன். அவர் பேங்கில் வேலை பார்க்கின்றார். மாதம் அறுநூறு ரூபாய் சம்பளம், தாய் தந்தையர் ஒருவருங் கிடையாது. அவர் உனக்குக் கணவனாக அமைவது முருகன் கருணைதான். உனக்குச் சம்மதந் தானே?'' என்று கேட்டார்.

அப்பா! எனக்கு என்ன தெரியும்? தாங்கள் பார்த்து எது நன்மையென்று செய்கின்றீரோ அதுதான் என் சம்மதம். மாட்டைக் கேட்டு வண்டியில் பூட்டியவன் எங்காவது உண்டா? இல்லறமாகிய வண்டியிலே மாடுபோன்ற என்னை எனக்கு எஜமானனாகிய தாங்கள் பூட்டி வைக்கின்றீர்கள். இழுத்துச் செல்வது என் கடமையும் பொறுப்புமாகும். வள்ளி மணவாளன் கருணையும் தங்கள் ஆசியும் இருந்தால் என் வாழ்வு சிறக்கும்'' என்றாள் மாதேவி.

மாதேவிக்கும் சிற்றம்பலத்துக்கும் கோடம்பாக்கம் பழனியாண்டவர் சந்நிதியில் சிறப்பாகக் கல்யாணம் நடந்தது. ஒரு வாரம் மாமனார் வீட்டில் தங்கியிருந்து, சிற்றம்பலம் தன் மனைவியுடன் பெங்களூர் போய்ச் சேர்ந்தான். புதிய மனைவியுடன் புதுக்குடித்தனஞ் செய்தான். மாதேவி தன் கணவனுக்கு வேண்டிய பணிவிடைகள் முழுவதையும் தன் கையால் செய்தாள். இனியவுணவுகளைச் சமைத்து வாய்க்கு ருசியாகப் படைத்தாள். அவள் இடத்தில் சோம்பல் என்பது கடுகளவுகூட இல்லை. ஆதலால் குடும்ப காரியங்கள் அனைத்தையும் அவளே கவனித்துத் திறம்படச் செய்தாள். இருந்த ஒரே குறை அழகில்லாதது ஒன்றுதான். ஆனால் அவளிடம் இருந்த கற்பு நெறி தங்கக் கலசம்போல் ஒளி செய்தது.

இல்லறமாகிய நல்லறம் கடற்கரைச் சாலையில் கார் போவது போல் சுகமாக நடந்தது. சிற்றம்பலம் மனைவியின் உபசரிப்பில் உள்ளம் உவந்தான். ஆனால் மனைவியை வெளியே விசேட வீடு

கட்கோ பிற நிகழ்ச்சிகட்கோ அழைத்துக்கொண்டு போக மாட்டான். அதற்குக் காரணம் அவளின் அழகின்மையேதான்.

அவன் தனக்குள் நினைத்துக் கொள்வான். "ஏ மனமே! ஏன் நீ பேயாட்டம் போடுகின்ருய். மாதேவியிடம் என்ன குறையுளது? நிறம் இல்லாமை ஒன்றுதானே. நிறத்தில் என்ன இருக்கின்றது? உமாதேவியாரும், திரௌபதியும், வள்ளி நாயகியும் கருமை நிறந் தானே? நாவற் பழம் கருமையாக இல்லையா? மாதேவி நமக்குச் செய்யும் உபசாரங்கள் எண்ணற்றன. அவள் அன்பு ஆழ் கடலிலும் பெரிது. இவளைப் போன்ற ஒரு உத்தமியைக் காண்பது அரிது. உத்தமமான உள்ளம் படைத்த அவள் குணக்குன்று. அவளுடன் வாழ்வது உவந்தது" என்று எண்ணுவான். நடுவே நடுவே அவள் அழகில்லையே என்ற ஏக்கமும் வந்து அவனை வாட்டியது.

சில காலத்துக்குப் பின் வீட்டு வேலைக்கு ஒரு பணிப் பெண் அமர்த்தப்பட்டாள். அவளுக்கு வயது இருபது. முகத்தில் நல்ல களை; பொன்னிறம். கரு கரு என்று சுருண்டு அழகிய கூந்தல், கூரிய விழி, சீரிய மொழி; எடுப்பான மார்பகம். எத்தகைய உறுதியுள்ள ஆடவரும் அவளைப் பார்த்தால் ஒரு கணம் மருண்டு திகைத்து நிற்பர். அத்துணைக் கவர்ச்சி அவள்பால் இருந்தது. அவள் பேர் சுஜாதா. மாதேவி சுஜாதாவை மாதம் பத்து ரூபாய் என்று சம்பளம் நிர்ணயஞ் செய்து வேலைக்கு அமர்த்தினுள். அவளை அன்பாக வைத்திருந்தாள்.

நாட்கள் சில சென்ற பின் சிற்றம்பலத்தின் சிந்தை சுஜாதாவிடம் பதியலாயிற்று. ஒருநாள் காலை படுக்கையைவிட்டு எழுந்து சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தான்: சுஜாதா அங்கு போய் அறையைக் கூட்டிச் சுத்தம் செய்துகொண் டிருந்தாள். அவளுடைய முன்தானையும் நீண்டப் பின்னலும் சிற்றம்பலத்தின் மீது உராய்ந்தன. அப்போது அவன் உடம்பில் மின்சாரம் ஏறியது போன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. அவள் முகத்தை ஒரு வெட்டுவெட்டிக் கோணி நாணி சிற்றம்பலத்தைப் பார்த்து ஒரு புன் சிரிப்பு செய்தாள். அவள் கன்னத்தில் குழி விழுந்தது. அந்தச் சிரிப்பில் ஏதோ மின் அலையிருந்தது. சிற்றம்பலம் மயங்கித் தயங்கினுன். மெல்ல எழுந்து அவள் அருகில் போய் சடையைப் பிடித்து இழுத்தான். அவள் மிகுந்த வெட்கங்கொண்டு அவன் கையில் இருந்த சடையை இழுத்துக் கொண்டாள்.

"என்னங்க நீங்க சின்னப்பிள்ளை மாதிரி செய்யறீங்களே?"

"சுஜா! நான் என்ன கிழவனு? உன் கூந்தல்தான் என்ன அழகு? உன் முகத்தில் அழகு ஒழுகின்றது. இப்படி வா" என்று அவள் கையைப் பிடித்து இழுத்து அவள் முகத்தைத் தன் முகத்துடன்

வைத்துக் கொண்டான். உள்ளமும் உடலும் கிளுகிளுத்தன. சுஜாதா அச்சத்தால் நடுங்கினுள் "ஐயா! அம்மா பார்த்துவிட்டால் ஆபத்தாகிவிடும்" என்று கூறிவிட்டு விளக்குமாற்றை எடுத்துக் கொண்டு கீழே சென்ருள்.

சுஜாதா மெல்லமெல்ல சிற்றம்பலத்தின் உள்ளத்தில் இடம் பெற்றுவிட்டாள். மறைமுகமாக அவள் இன்பத்தைச் சிற்றம்பலம் நுகர்ந்தான். சுஜாதாவுக்குச் சிற்றம்பலத்தின் உறவு கிடைத்தது பற்றிப் பெருமகிழ்ச்சி.

சுஜாதாவின் நடையில் மாதேவி ஐயுற்ருள். தன் கணவனை இவள் வலைபோட்டுப் பிடித்து விட்டாள் என்பதை ஊகித்து உணர்ந்தாள். அவள் மனதில் பெரும் அதிர்ச்சியுண்டாயிற்று. அவள் மிக்க அறிவுள்ளவள் ஆதலின் மனதைத் திடப்படுத்திக்கொண்டாள்.

"நாம் கற்புடைய பெண். கற்புடைய பெண் கணவனுக்கு விருப்பமானதைத் தரவேண்டும். சுவையான உணவைப் படைக்க வேண்டும். அவருக்கு எது பிரியமோ அது நமக்கும் பிரியமாக இருக்கவேண்டும். நாம் கருப்பு; சுஜாதா நல்ல சிவப்பு. சிவப்புப் பெண்ணுடன் அவர் உறவுகொள்ள ஆசைப்படுகின்ருர். அதற்கு நாம் தடையாக இருக்க வேண்டாம். நாம் இவர்கள் உறவைக் கவனிக்காமல் இருப்பது கண்ணியம்" என்று கருதி மனதைச் சாந்தப் படுத்திக் கொண்டாள்.

சில நாட்கள் சென்றன. சுஜாதாவுடன் சிற்றம்பலம் படம் பார்க்கப் போவான். ப்ார்க்குக்குப் போவான். உல்லாசமாக அவளுடன் உறவாடுவான். அவள் தனக்கு ஆசைநாயகியாகக் கிடைத்ததைப் பற்றித் தன்னை அதிர்ஷ்டசாலியென்று எண்ணிக் கொள்ளுவான்.

இந்த இன்ப வண்டி ஒராண்டு ஓடியது. சிறியவர்கட்கு வாழ்வு வருவது குரங்குக்குக் கள் வார்த்ததுபோல ஆகும். சுஜாதாவுக்கு வரவர மண்டைக் கனம் உண்டாயிற்று. தன்னைச் சிறந்த அழகியென்று கர்வங் கொண்டாள். கர்வங் கொண்டதோடு நில்லாமல் தன் எஜமானியாகிய மாதேவியை அலட்சியம் பண்ணினுள். அடிக்கடித் தன்னைக் கண்ணுடியில் பார்த்துக் கொண்டாள். விதம்விதமாகத் தலையை முடிந்து, ஒயிலாக மனம்போல் நடந்தாள்.

இன்னும் சில நாட்கள் கடந்தபின் சுஜாதா எஜமானி போலவும் மாதேவி வேலைக்காரி போலவும் அவள் நடந்து கொண்டாள். தான் ஒருபுறம் இருந்துகொண்டு மாதேவியை வேலை வாங்குவாள். சிற்றம்பலம் தன் அழகில் ஈடுபட்டுத் தன்னை மதிக்கின்ருன் என்ற அகங்காரம் படிந்தது. அவளிடம் தற்பெருமை தலைவிரித்தாடியது.

ஒருநாள் சிற்றம்பலத்தைப் பார்த்து "அந்தக் கருப்பியுடன் உங்களுக்கு என்ன பேச்சு? இங்கே வாருங்கள்" என்ருள். இதைக் கேட்டான் சிற்றம்பலம். அவள் அழகில் மயங்கியிருந்தாலும், இது வாய்த்துடுக்கான சொல் என்று அவன் மனச்சான்று கூறியது.

"அடியே! மாதேவி நற்குணக்குன்று. அவளைக் கருப்பி என்று சொன்னுயே? என்று வெகுண்டு, சுஜாதாவின் கன்னத்தில் ஒரு அறை கொடுத்தான். அவள் 'ஓ' என்று அழுதாள். மாதேவி இந்த ஆரவாரத்தைக் கண்டு ஓடி வந்தாள். தன் கணவனைப் பார்த்து "பெருந்தகையே! சுஜாதா என்னைக் கருப்பி யென்று சொன்னதில் குற்றம் ஒன்றும் இல்லையே உள்ளதைச் சொன்னுல் உடம்பெரிச்சலா ? கருப்பென்ருல் வெறுப்படையலாமா ? கடல் கருப்பு; மேகங் கருப்பு; கண்ணன் கருப்பு. அதனுல் இவைகள் இழிவடைகின்றனவா ? சுஜாதா சொல்லியா என்னை நீங்கள் கருப்பியென்று உணரப் போகின்றீர்கள். இவளை ஏன் அடித்தீர்கள். உண்மையைச் சொன்னதற்குத் தண்டனை தரலாமா ? மன்னிக்கவும்" என்று கண் கலங்கிக் கணவனை வேண்டிக் கொண்டாள்.

இந்த அன்பும் அறிவும் நிரம்பிய அறவுரையைச் சிற்றம்பலம் கேட்டு அதிசயம் அடைந்தான். "ஆஆ! இவள் பெண்ணல்ல; பெண் குலம் வாழ வந்த பெருந்தெய்வம். சுஜாதா தன்னைக் கருப்பி என்றதைக் கேட்டு இவள் சீற்றம் அடையவில்லை. எனக்கே ஆறுதல் கூறுகிருள். மாதேவியிடம் அழகு என்ற ஒன்று மட்டுமில்லை. மற்ற நற்குணங்கள் யாவும் இருக்கின்றன. சுஜாதாவிடம் அழகு மட்டும் இருக்கின்றது. மற்று துர்க் குணங்கள் அனைத்தும் இருக்கின்றன. சுஜாதாவின் சிறுமையெங்கே ? மாதேவியின் பெருமை எங்கே ? மாதேவி காமதேனுவின் பால்; சுஜாதா காடித் தண்ணீர்! நாம் அறிவில்லாமல் சுஜாதாவிடம் உறவாடினேம். அதையறிந்தும் மாதேவி மாறுபட்டாளில்லை; நம்மைத் தெய்வம் மன்னிக்குமா ?" என்று தனக்குள் நினைத்துக் கொண்டான்

ஒரு நாள் சுஜாதா மாதேவியைக் கொடுஞ்சொற்களால் வைதாள். இதைக் கேட்ட சிற்றம்பலம் பெரிதும் வேதனையடைந்தான். "சுஜாதா! மாதேவி சிறந்த பண்புள்ளவள். அவள் மங்கையர்க்குள் மாணிக்கம். அவள் மனதைப் புண்படுத்தாதே. புண்படுத்திஞல் நீ கண்தெரிந்து வழி நடக்கமாட்டாய்" என்ருன்.

மாதேவி, "சுவாமி! தங்கள் மலர் வாக்கினுல் அப்படிச் சொல்ல வேண்டாம். அகாரணமாகப் பிறர் வைதால் அவர்கள் செய்த புண்ணியத்தைக் கொடுத்துவிட்டு என்பாவத்தை எடுத்துக்கொள்ளுகின்ருர்கள். ஆகவே சுஜாதா என்னை வைதால் எனக்கு உபகாரமே செய்கின்ருள். அதனுல்தான் நான் அவள்மீது வருத்தம் கொள்ள

வில்லை. தாங்கள் ஏன் வருத்தமும் சினமும் கொள்ளுகின்றீர்கள்'' என்று கூறி ஆறுதல் செய்தாள்.

ஒரு நாள் மாதேவி வீட்டு விலக்காக இருந்தாள். அன்று ஒரு பண்டிகை. சுஜாதா சமையலறையில் எண்ணெய்ச் சட்டி வைத்து வடை சுட்டுக் கொண்டிருந்தாள். மேலிருந்து ஒரு பெரிய அரணை எண்ணெய்ச் சட்டியில் பளிச்சென்று வீழ்ந்தது. கொதிக்கின்ற எண்ணெய் கொப்புளித்து அவள் இரு கண்களிலும் தெறித்து விழுந்தது. முகத்திலும் எண்ணெய் பட்டது. ஐயோ! என்று அலறி சுருண்டு விழுந்தாள். உடனே சிற்றம்பலம் அழைக்க டாக்டர் வந்து சிகிச்சை செய்தார்.

சுஜாதா முகமும் கண்ணும் கொப்புளித்துப் புழுவாய்த் துடித்தாள். என்ன சிகிச்சை செய்தும் குணத்துக்கு வராமல் இரு கண்களும் கெட்டுவிட்டன. பளபள என்று அழகுடனிருந்த முகம் குழி குழியாக விகாரமடைந்து விட்டது.

சுஜாதா அப்போது சிந்தித்தாள். கற்பு நிறைந்த மாதேவியின் மனம் வேதனையடையுமாறு நாம் நடந்தோம். பத்தினிகள் மனம் நொந்தால் அதன் பலன் உடனுக்குடன் விளையும். அந்தோ! அம் மாதரசியின் மனத்தைப் புண்படுத்தினேன். என் முகம் புண்பட்டது. அவள் மனம் நொந்தால் உனக்குக் கண் தெரியாமல் போகும் என்று அன்றொரு நாள் அவர் கூறினார். அவர் உரை பலித்துவிட்டது. கண் தெரியாமல் இனி நாம் எப்படி வாழ்வது? என்று மனம் மறுகினாள். ஆறாத்துயரம் அடைந்தாள். அவளுக்கு வந்த இடர்ப் பாட்டைப் பார்த்து சிற்றம்பலம் ''இவளுக்கு ஏற்ற தண்டனை தான். அடாது செய்தவர் படாது படுவர்'' என்பது போல் இவள் கடவுளால் தண்டிக்கப்பட்டாள். நாம் இவளைத் தீண்டியதும் பிழை. இனி நாம் சீலந் தவறாது வாழவேண்டும்'' என்று எண்ணித் திருந்தினான்.

மாதேவி சுஜாதாவுக்கு ஆறுதல் கூறி, அவளுக்குப் பணி புரிய ஒரு பெண்ணை நியமித்தாள். வேளை தவறாது அவளுக்கு உணவு தருமாறு செய்தாள். தன்னை நிந்தித்த அவளுக்குங் கருணை காட்டி ஆதரவு செய்தாள். அதனால் மாதேவியின் பெருமை துடைத்துவிட்ட வைர நகைபோல மேலும் ஒளி செய்தது.

# மகாபாரதம்

## சாந்திபருவம்

### மோக்ஷ தர்மம்

(120-ஆம்பக்கத் தொடர்ச்சி)

தருமபுத்திரர், "பிதாமகரே! புண்ணிய பாவப் பயன்களைப் பற்றி எனக்குக் கூறவேண்டும்" என்று கேட்டார்.

### புண்ணிய பாவம்

பீஷ்மர், "தருமா! நான் இவ்வுலகில் இருப்பதை யறிவதுபோல் மேல் உலகத்தில் இருப்பதையும் அறிவேன். அநேகர் கெட்ட புத்தியால் பாவங்களைச் செய்கின்றார்கள். அதனால் அவர்கள் இருள் உலகமாகிய நரகத்துக்குப் போய்த் துன்பத்தை நுகர்கின்றார்கள். கலப்புக் கன்மங்களால் மீளவும் பூமியில் பாம்பு, பல்லி, அட்டை முதலிய பிராணிகளாகப் பிறக்கின்றார்கள். தருமந்தான் சுகத்துக்குக் காரணம். இதையறியாதவன் மனிதர்களுக்குள் பதர் போன்றவன்

இப் பிறப்பில் புண்ணியஞ் செய்தவர்கள் ஒளியுலகமாகிய புண்ணியலோகஞ் சென்று இன்பத்தை நுகர்ந்து முடிவில் கலப்புக் கன்மங்களை யனுபவிக்க பூவுலகில் உயர்ந்த பிறப்பாகத் தோன்றுவார்கள். ஆதலால் சுகதுக்கத்துக்கு அவரவர்கள் செய்த வினை ஆன்மாக்களுடன் நிழல்போல் தொடர்ந்து வரும். நின்றால் நிற்கும். சென்றால் தொடரும். படுத்தால் படுக்கும். எல்லாம் தானே அறிகின்ற இறைவன் அவரவர்கள் செய்த வினைகளை ஊட்டி வைக்கின்றான். புண்ணிய உலகில் ஆன்மாக்கள் பூதசார உடம்புடன் சுகங்களை நுகரும். சுவர்க்கத்தில் பசி தாகம் கிடையா. கிழத்தனம் இல்லை. வேர்வை, மலம், சலம் இல்லை. இளைப்பு இல்லை. இன்பமேதான். இந்தவுலகில் ஆன்மா பூதபரிணாம உடம்புடன் சுகதுக்கங்களை மாறிமாறி நுகரும். நரக உலகில் ஆன்மா பூதமாதநுவுடன் கொடிய துன்பங்களை நுகரும்.

ஆதலால் தீவினைகள் செய்தோர் இம்மை மறுமை என்ற இருவுலகங்களிலும் நன்மையடைய மாட்டார்கள். தவஞ் செய்தவர்கள் உத்தம கதியையடைவார்கள். விண்ணில் பறவைகளின் அடிச்சுவடும் நீரில் மீன்களின் அடிச்சுவடும் எவ்விதம் காணப்படுவதில்லையோ அதுபோல், ஞானிகள் சென்ற வழி காணப்படுவதில்லை. நிலத்தில் எதனை விதைக்கின்றானோ அதனையே அறுவடை செய்கின்றான்.

வேம்பை விதைத்தவன் கரும்பையடையமாட்டான். அதுபோல், பாவம் செய்தவர்கள் துன்பத்தையே நுகர்வார்கள். பாவத்தைச் செய்யாது, புண்ணியத்தைப் பயன் கருதாது புரிதல் வேண்டும்'' என்ருர்.

யுதிஷ்டிரர், ''மாண்புடையவரே! உலகம் எப்படித் தோன்றியது. உயிர்கள் எப்படித் தோன்றின? இவற்றை எனக்குச் சொல்லும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் கூறுகின்ருர். ''தருமநந்தனு! கைலேமலேயில் பிருகு முனிவர் ஒளி வடிவாக இருந்தார். அவரைப் பார்த்து பாரத்வாஜர் இந்த வினுக்களேக் கேட்டார்.

பிருகு முனிவர் கூறினுர். நாராயணருடைய நாபிக்கமலத்தில் பிரமதேவர் தோன்றினுர். அவர் இந்த எல்லாவுலகங்களேயும் படைத்தார். ஆன்மாக்கள் என்றும் உள்ளவைகள். உயிரகள் படைக்கப்பட்டவையன்று. கட்டைக்குள் நெருப்பு மறைந்திருப்பது போல் உயிர்க்குள் இறைவன் மறைந்திருக்கின்ருன். கட்டையை வெட்டினுல் நெருப்பு வெளிப்படமாட்டாது, கடைந்தால் வெளிப்படும். அதுபோல் தியான யோகத்தால் கடவுளேயறிதல் வேண்டும்.

மனிதர்கள் தத்தம் தொழிலால் உயர்வும் தாழ்வும் அடைந்தார்கள். வேத நெறிகளேக் கடைப்பிடித்து சத்தியம் சாந்தம் பொறுமை புலனடக்கம் இன்சொல் ஆகிய நற்குணங்களேயுடையவன் அந்தணன்; அடக்கியாளுதல், ஆற்றல் வீரம் இவைகளேயுடையவர்கள் அரசர்கள்; பசுக் காத்தல், வாணிகம் புரிதல், பொருளீட்டுதல் இவைகளேயுடையவர்கள் வணிகர்கள். உழுதல் தொண்டு புரிதல் இவைகளேயுடைவர்கள் வேளாளர்கள். இப்படியான பிரிவுகள் பின்னே தோன்றின. பிராம்மணன் பிராம்மணுகவே இருப்பான் என்பதில்லே. பிராம்மண தருமங்களே மேற்கொண்டிருப்பவனே பிராம்மணன். அதுபோல் மற்றக் குலங்களிலும் அவரவர்கள் ஒழுக்கத்தால் உயர்வு பெறுகின்ருர்கள்.

அறியாமையால் துக்கமும், அறிவினுல் சுகமும் விளேகின்றன. அறியாமையால் மூடப்பெற்றவர்கள் துன்பத்தை யனுபவிக்கின்ருர்கள். ஞான வைராக்கியத்தால் மோக்ஷம் சித்திக்கின்றது.

ஓமம் செய்வதனுல் பாவம் விலகுகின்றது. வேதம் ஓதுவதனுல் உத்தமமான சாந்தியுண்டாகின்றது. தானத்தால் போகம் விளேகின்றது. தவத்தால் எல்லாம் உண்டாகும்.

## நான்கு ஆச்ரமங்கள்

நன்ருகப் பொறிபுலன்களே அடக்கி, குருநாதன் அருகில் இருந்து ஆசாரத்துடன் வேதங்களே ஓதுவது பிரமசர்யம். பிரம்மசாரி மூன்று

வேளைகளிலும் நீராடி, பிச்சையெடுத்து உண்டு, குருநாதனுக்குப் பணிவிடை புரிதல் வேண்டும்.

திருமணம் புரிந்து கொண்டு, குறித்த காலத்தில் மனைவியுடன் கூடி, நன்மக்களைப் பெற்று, விருந்தோம்பி அறநெறியில் பொருளை ஈட்டி வாழ்வது இல்லறம். இல்வாழ்வானுடைய வீட்டுக்கு ஒரு உத்தமமான அதிதி வந்து உணவு பெறுமல் வறிதேதிரும்புவானாயின் அவன் செய்த பாவத்தில் பகுதி இல்வாழ்வானைச் சாரும். அன்றி இல்லறத்தான் செய்த புண்ணியத்தில் ஒரு பகுதி அதிதி பெறுகின்றான். ஆதலால் இல்லறத்தான் அதிதிகளை ஓம்புவதில் கண்ணுங் கருத்துமாக இருக்க வேண்டும். விருந்தோம்பல்தான் இல்லறத்தானுடைய தலையாய கடமை. ஏனைய மூன்று ஆச்ரமிகட்கும் இல்வாழ்வான் துணையாக இருக்க வேண்டும். சிறந்த நெறியில் நிற்பானாயின் இல்லறத்தானுக்கு எல்லா நலன்களும் உண்டாகும்.

வானப்பிரஸ்தன், மனைவியுடனாவது, தனித்தாவது, வனத்தில் வசித்து, தவவொழுக்கத்துடன், கடும் விரதங்களை மேற்கொள்ள வேண்டும். தீர்த்தயாத்திரை, க்ஷேத்திர யாத்திரை செய்து கொண்டு, பொறிபுலன்களை யடக்கி, சிறிதளவு உண்டு ஆசார நியமங்களுடன் இருக்க வேண்டும்.

சந்யாசி எல்லாவற்றையும் ஒருங்கே விட்டு பரம்பொருளை நாடி நிற்கவேண்டும். கல்லையும் பொன்னையும் ஒன்றாகப் பார்க்க வேண்டும். பகைவனையும் நண்பனையும் சமமாகப் பார்க்க வேண்டும். நகரத்தில் ஐந்து இரவுக்கு மேலும் கிராமத்தில் ஒரு இரவுக்கு மேலும் தங்கக்கூடாது. யாசிக்காமல், விரும்பித் தந்த அற்ப உணவை உண்ண வேண்டும். தனக்கென்று ஒன்றையும் வைத்துக் கொள்ளக் கூடாது சதா தியான யோகத்தில் அசைவற நின்று ஒழுகுபவன் உத்தமமான சந்யாசி. மூன்று உலகங்களும் அந்த சந்யாசிக்கு வசமாகும். சந்யாச தர்மம் கடினமானது. இரு சந்யாசிகள் ஒரு நாள் சேரலாம். மறுநாள் சேர்ந்திருக்கக்கூடாது. மூன்று சந்யாசிகள் சேரவே கூடாது'' என்று பிருகு முனிவர் பரத்வாஜருக்குக் கூறினார்.

## ஆசாரம்

தருமர், ''தந்தைக்குத் தந்தையே! ஆசாரத்தைப் பற்றியறிய விரும்புகின்றேன்'' என்றார்.

பீஷ்மர், ''ஆசாரம் நன்மைக்கு விதையாக விளங்குகின்றது. வழிகளிலும், பசு மந்தையிலும், தான்யத்தின் நடுவிலும், ஆலயத்திலும், நதி குளம் மடுக்கரைகளிலும், மலஜலங் கழிக்கக்கூடாது. கைகால் முகங்களைக் கழுவிக்கொண்டு நதியில் இறங்கி நீராட வேண்

டும். தர்ப்பணஞ் செய்ய வேண்டும். சூரியனை வணங்கவேண்டும். சூரியன் உதிக்கும் போதும் அத்தமிக்கும் போதும் உறங்கக்கூடாது. காலையிலும் மாலையிலும் ஜபம் புரியவேண்டும். காலையில் நின்று கொண்டும் மாலையில் இருந்து கொண்டும் ஜெபிக்க வேண்டும். கிழக்கு முகமாக இருந்து மௌனமாக உணவருந்த வேண்டும்.

காலில் ஈரத்துடன் இரவில் படுக்கக்கூடாது. பசுக்களையும், அக்கினியையும் அந்தணனையும் தேவதைகளையும் வலமாகப் போக வேண்டும். அதிதிகட்கும், உறவினருக்கும், வேலைக்காரனுக்கும் வேற்றுமையின்றி சமமான உணவு தரவேண்டும். இரண்டு வேளை யுண்ணவேண்டும். இடையில் உண்பது விதிக்கப்படவில்லை. இரு வேளை விதிப்படி உண்பவன் உபவாசத்தின் பயனையடைவான் ருது காலத்தில் மட்டும் மனைவியுடன் கூடுபவன் பிரம்மசாரி போன்றவனு வான். அதிதிகள் உண்ட மிச்ச அன்னம் தாயின் மனம் போலவும் அமுதம் போன்றதும் ஆகும். அதனையுண்டவன் நற்கதியடை கின்றான். நகத்தைக் கடிப்பது ஆயுளைக் குறைக்கும். புலால் உண்ணக் கூடாது. சூரியன் உதிக்கும்போது பார்க்கக்கூடாது. அன்னியன் மனைவியையும், ஆடையில்லாத மனைவியையும், தன் மலத்தையும் பார்க்கக்கூடாது. பசுவின் வாலைத் தொடுவது புண்ணியமாகும். காலையும் மாலையும் பெரியோர்களை வணங்க வேண்டும். சூரியனுக்கு எதிர்முகமாக நீர்கழித்தல் கூடாது. பிறர் குற்றங்குறைகளைக் கூறக் கூடாது. தான் செய்த பாவத்தைப் பிறர் அறியக் கூறவேண்டும். புண்ணியத்தைக் கூறக்கூடாது. நல்ல சிந்தனையும், இனிய சொற் களையும் பிறருக்கு நன்மையான காரியங்களையும் செய்ய வேண்டும். இவ்வாறு ஒழுகுபவன் தெய்வத்தன்மையை அடைகின்றான்'' என்றார்.

## பரலோகம்

பரத்வாஜர் பிருகு முனிவரைப் பார்த்து ''இந்த உலகத்தைவிட வேறு உலகங்கள் உளவா?'' என்று கேட்டார்.

பிருகு முனிவர் ''அன்பனே! மிகுந்த புண்ணியம் புரிந்தவர்கள் புண்ணியவுலகங்களை யடைகின்றார்கள். இந்த மண்ணுலகம் கர்ம பூமியாகும். இது புண்ணிய பாவமான கலப்புக் கன்மங்களை யனு பவிக்கத்தக்கது. சுகம் துக்கம், அறிவு அறியாமை, வெயில், நிழல், இருள் ஒளி, செல்வம் என்ற இருவகைத் தன்மைகளுடன் கூடியது இந்த வுலகம்.

புண்ணிய லோகத்தில் பசி தாகம் வேர்வை நோய் முதலி யவை உண்டாவதில்லை. அங்கு ஒருவனை ஒருவன் அடிப்பதில்லை. அங்கு செய்த வினைப்பயன் கண்கூடாகக் காணப்படும். அங்கு இன்பமேயன்றித் துன்பங் கிடையாது நறுமணமும் ஒளிமயமுமாகத் திகழும். புண்ணியத்தைச் செய்தவர்கள் பரலோகத்தில் இன்

புறுகின்றார்கள். பாவத்தைச் செய்தவர்கள் பாம்பு தேள் பறவை விலங்கு முதலிய பிறவிகளை யடைந்து வேதனையடைகின்றார்கள்'' என்று கூறினார்.

யுதிட்டிரர் பீஷ்மரைப் பார்த்து ஆசாரங்களைக் கூறுமாறு கேட்டார். பீஷ்மர் ''நல்ல ஆசாரம் மனிதனை உயர்த்துகின்றது. வழியிலும், ஆலயத்தின் அருகிலும், பசுக்களின் நடுவிலும், நீர்க்கரையிலும், தானியத்தின் நடுவிலும் மலஜலங்களை கழிக்கக் கூடாது.

நதியில் நீராடி தேவர்களைக் குறித்துத் தர்ப்பணஞ் செய்ய வேண்டும். கதிரவனைத் துதி செய்யவேண்டும். சூரியன் உதிக்கும் போது, அஸ்தமிக்கும் போது தூங்கக் கூடாது. காலை மாலை ஜபஞ் செய்யவேண்டும். காலையில் நின்றுகொண்டும், மாலையில் உட்கார்ந்து கொண்டும் ஜபிக்க வேண்டும். இரண்டு கால்கள் இரண்டு கைகள் முகம் இந்த ஐந்து அங்கங்களையும் அலம்பிக்கொண்டு, கிழக்கு நோக்கி அமர்ந்து மௌனமாக உணவு உட்கொள்ளவேண்டும். உணவுப் பொருள்களை இகழக் கூடாது. இரவில் காலையலம்பி உலர்ந்த பின் படுக்கவேண்டும். பசு அந்தணன் நெருப்பு இவைகளை வலமாகப் போகவேண்டும். இடையில் உணவு செய்வது கூடாது. உரிய காலத்தில் மட்டும் உண்டவன் உபவாசம் இருந்த பயனையடைகின்றான் ருது காலத்தில் மட்டும் மனைவியை மருவுகின்றவன் பிரம்மசரிய பயனை யடைகின்றான். அதிதிகளை உண்பித்த பின் மிகுதியான உணவு தாயின் மனம் போலவும் அமுதம் போன்றதுமாகும்: மண்கட்டிகளை உடைப்பவனும், புற்களைக் கிள்ளுகின்றவனும் நகத்தைக் கடிப்பவனும், எப்போது எச்சிலுள்ளவனும், பேராசையுடையவனும், அற்ப ஆயுளையடைவான். பெரியோர்களுக்கு ஆசனந்தந்து வணங்கவேண்டும். உதிக்கும் சூரியனையும், பிறர் மனைவியரையும், ஆடையில்லாத மனைவியையும் பார்க்கக் கூடாது. மகளுடனும், மனைவியுடனும் ஒரு படுக்கையில் படுக்கக்கூடாது. பெரியோர்களின் பேர்களைச் சொல்லக் கூடாது அவர்களை நீ என்றும் சொல்லக் கூடாது. இடக்கையால் தண்ணீர் குடிக்கக்கூடாது'' என்று கூறினார்.

## அத்யாத்மம் எது ?

தருமநந்தனர் ''பிதாமகரே! அத்யாத்ம ஞானம் என்பது எது? அதை எனக்கு உபதேசிக்க வேண்டும்'' என்று வினவினார். பீஷ்மர் ''பார்த்தனே! அத்யாத்ம ஞானத்தை உனக்கு விளக்கமாகக் கூறுகின்றேன். ஒருமைப்பட்ட உள்ளத்துடன் கேள். ஆத்மாவை அறியாமையென்ற இருள் மறைத்துக் கொண்டிருக்கின்றது. அந்த அஞ்ஞானத்தை ஞானத்தால் விலக்க வேண்டும்.

ஓசையும் செவியும் வெளியும் ஆகாயத்திலிருந்து உண்டானவை. பரிசம் அசைவு தோல் இவைகள் வாயுவிலிருந்து உண்டானவை;

ஒளி வடிவம் கண் இவைகள் அக்கினியிலிருந்து உண்டானவை. சுவை ஈரம் நா என்பவை நீரில் இருந்து உண்டானவை. இந்த ஐம்பெரும் பூதங்களுக்கு அப்பாற்பட்டது மனம். புத்தி ஏழாவது தத்துவம். உயிர் இவைகட்குத் தலைமை பூண்டிருக்கின்றது. தன் ஆன்ம இலக்கணத்தையும் ஆத்ம தத்துவத்தையும் தெளிவாக அறிவது அத்யாத்ம ஞானமாகும். ஆத்மஞானம் பெற்றவன் நீரில் உலாவும் அன்னம் நீர் ஒட்டாது இருப்பதுபோல், தத்துவக் கூட்டத்தில் ஒட்டாமல் இருப்பான். ஞானமில்லாதவன் முக்குண வசப்படுவான். சத்துவ குணத்தின் தன்மைகள் மகிழ்ச்சி அன்பு இன்பம் அடக்கம் என்பவை. இராஜஸ குணத்தின் தன்மைகள் வீண்பெருமை கோபம் பகை டம்பம் ஆடம்பரம் பொறாமை முதலியவை. தாமத குணத்தின் தன்மைகள் அறியாமை தூக்கம் மயக்கம் சோம்பல் முதலியவை. அறியாமை தூக்கம் மயக்கம் சோம்பல் முதலியவை அத்திப் பழத்தில் கொசுக்கள் சேர்ந்திருப்பது போல் ஆன்மாவில் இந்த முக்குணங்கள் சேர்ந்திருக்கின்றன. க்ஷேத்ரக்ஞன ஆத்மா அறிவின் சேர்க்கையால் குணங்களை விலக்கி, இன்ப துன்பங்களினின்று விலகி சுகியாக இருக்கும்.

உத்தமர்கள் தட்ப வெப்பம் இன்பம் துன்பம் முதலிய இரட்டைகளிலிருந்து விடுபட்டுத் தியானயோகஞ் செய்துகொண்டிருப்பார்கள். யோகிகள் விழித்திருந்துங் கண்ணால் பொருள்களைப் பார்க்க மாட்டார்கள். அவர்கட்கு சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலன்கள் அவிந்து செயலற்றிருக்கும். மனம் காற்றில்லாத இடத்தில் விளக்கு போல் சலனமற்று அடங்கி நிற்கும். சமாதி யோகத்தில் நிலைத்து நின்றவர்கள் பிறப்பையடைய மாட்டார்கள்'' என்று கூறினர்.

## ஜெபத்தின் பயன்

யுதிஷ்டிரர், ''பிதாமகரே! நான்கு ஆச்சிரமங்கள் அரச தருமங்கள் முதலிய யாவும் எனக்கு உபதேசித்தீர். தருமத்துடன் கூடிய பல கதைகளைக் கூறினீர். எனக்கு ஒரு சந்தேகம் இருக்கின்றது. நீர் அதைச் சொல்லவேண்டும். ஜபஞ் செய்கின்றவர்கட்கு என்ன பயன்? ஜபஞ்செய்கின்றவர்கட்கு எந்த உலகம் கிடைக்கின்றது? ஜபத்தின் விதியை முழுவதும் எனக்கு நீர் சொல்லவேண்டும். ஜபமானது ஞானத்தைச் சேர்ந்ததா? யோகத்தைச் சேர்ந்ததா? கர்மத்தின் விதியா? அல்லது யாக விதியைச் சேர்ந்ததா? நீர் எல்லாவற்றையும் அறிந்தவர். சொல்லியருள வேண்டும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''ஜபமானது சகல சித்திகளையும் தரவல்லது. மித ஆகாரம், மித வசனம், பொறுமை, புலனடக்கம் முதலியவைகளை

யுடையவனுய் தருப்பைப் புல்லைப் போல் இருந்து, மனத்தை அடக்கி ஜெபம் செய்யவேண்டும். மந்திரத்தை நினைத்து அசைவற்று இருந்து ஒரு முகமாகி ஜெபம்புரியவேண்டும். மனம் ஒடுங்கிய பின் மந்திர உச்சாரணமும் நின்று விடும். அதன் முடிவில் சமாதி நிலை கை கூடும், சமாதி நிலையில் விருப்பு, வெறுப்பு, சோகம், மோகம், இன்பம், துன்பம் முதலிய இரட்டைகள் விலகிவிடும். முடிவில் முத்தி யுலகம் அடைவான்.

விருப்பமில்லாமலும், மனத்தை வேறு இடத்தில் வைத்தும் ஜெபம் செய்யக்கூடாது. அவ்வாறு செய்கின்றவர்கள் நலம் பெற மாட்டார்கள்.

ஒரு ஜெபமுனிவருக்கும் யமனுக்கும் காலனுக்கும் ம்ருத்யுவுக்கும் இக்ஷ்வாகுக்கும் முன் நடந்த ஒரு பழைய வரலாற்றைக் கூறுகின்றேன் கேள்.

## ஒரு அந்தணன்

கௌசிக கோத்திரத்திற் பிறந்த பிப்பலாத முனி புத்திரனுகிய ஒரு அந்தணன் ஆறு அங்கங்களையும் அறிந்தவன்; ஒழுக்கமுள்ளவன், இத்தகைய திறந்த வேதியன் இமய மலையில் அமர்ந்து பொறிபுலன்களை அடக்கி காயத்திரி மந்திர ஜெபம் புரிந்துகொண் டிருந்தான். ஒருமைப்பட்ட உள்ளத்துடன் ஆயிரம் ஆண்டுகள் ஜெபஞ் செய்தான். காயத்திரி தேவி அவன் முன் தோன்றினுள். அந்தணன் தேவியைப் பலமுறை வணங்கினுன்.

தேவி "அப்பா! நான் உன்னிடம் அன்புள்ளவளாக இருக்கின்றேன். உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டாள்.

அந்தணன், "மங்களமூர்த்தியே! இந்த ஜெபத்திலேயே என் மனம் மென்மேலும் விருப்பமுள்ளதாக இருக்கவேண்டும்." என்று வரங்கேட்டான். தேவி, "அன்ப! அவ்வண்ணமே ஆவதாக. உனக்கு மேலான நற்கதியுண்டாகும். காலனும், யமனும் மிருத்யுவும் உன் அருகில் வருவார்கள். அவர்க்கும் உனக்கும் தருமத்தைப்பற்றி விவாதம் உண்டாகும்" என்று கூறிவிட்டு காயத்திரி தேவி மறைந்தாள்.

அந்தணன் முன்போல் மறுபடியும் உறுதியுடன் நூறு தேவ வருடங்கள் ஜெபஞ் செய்தான். தர்மம் அவள் முன் காட்சியளித்தது. "ஏ அந்தணனே! நான் உன்னைக் காண விரும்பி வந்தேன். தருமமான என்னைப் பார். ஜபத்தின் பயனை நீ நன்கு அடைந்திருக்கின்ருய். மனிதர்கட்கு உரிய உலகங்கள் தேவர்கட்கு உரிய உலகங்கள் யாவும் உன்னுல் ஜயிக்கப்பட்டன. தேவர்கள் வாழும் உலகங்கள் அனைத்தையுந் தாண்டி மேலே செல்லப் போகின்ருய். உன்

உயிரைப் போக்கிக் கொள். மேலான உலகங்களை அடைவாய்'' என்று சொல்லிற்று.

பிராம்மணன் ' தருமமே! உலகத்தால் எனக்கு ஆகவேண்டியது ஏதும் இல்லை. பல துன்பங்களைப் பொறுத்த உடம்பை நான் விட மாட்டேன். நீ சுகமாகப் போ'' என்று சொன்னான்.

தர்மம், ''சிறந்த அறிவுள்ளவனே! அசுத்தமான இந்தவுடம்பினால் உனக்கு என்ன பயன்? நீ ஏன் அறியாமையை யடைகின்றாய்? உன் மனதை உறுதியாகச் செய்துக்கொள். உடம்பை விட்டு விடு. உடம்பை விட்டு உத்தம உலகத்தைச் சேருவாயாக'' என்றது.

பிராமணன் ''தர்மமே! உடம்பில்லாமல் சுவர்க்கத்தில் வசிப்பதை நான் விரும்பவில்லை உடம்பை விடு என்று ஏன் என்னை வற்புறுத்துகின்றாய். நீ போ என்றான்,

தருமம் ''அன்பனே! உடம்பில் பற்று வைப்பதில் பயனில்லை. உடம்பை விட்டு சுகமாக இரு. மேல் உலகம் சுகமானது'' என்றது.

பிராமணன், ''தருமமே! நான் ஜபஞ் செய்துகொண்டு மகிழ்ச்சியாக இருக்கின்றேன். ஸநாதனமான உலகங்கள் வேண்டாம். நான் மேல் உலகம் அடையவேண்டுமானால் இந்த உடம்புடன் அடைய வேண்டும். வேறுவிதமாக வேண்டாம்'' என்றான்.

தர்மம் ''முனிவரனே! உனக்கு உடம்பில் அதிக விருப்பம் இருக்கின்றது. உடம்பை விட விரும்பாமல் போனாலும் காலனும் மிருத்யுவும் யமனும் இதோ உன் அருகில் வந்திருக்கின்றார்கள் பார்'' என்று கூறியது. காலனும், மிருத்யுவும், யமனும் அந்த அந்தணன் அருகில் சென்று, ''உத்தமனே! நாங்கள் யமன், காலன், மிருத்யு என்ற தேவதைகள். நீ சுவர்க்கத்தை அடைய இது காலம். உண்மையாக நீ செய்த ஜெபத்தின் பயனை யடைந்திருக்கின்றாய். உன்னை அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறோம் என்று சொல்லின. பிராம்மணன் அவர்கட்கு அர்க்கியபாத்தியம் அளித்து, நல்வரவுகூறி உபசரித்தான். அந்த சமயத்தில் அங்கு இட்சுவாகு மன்னன் அங்கு வந்து அவர்களைப் பணிந்து நலம் வினவினான். அந்தணன் இட்சுவாகு மன்னனுக்கு ஆசனந் தந்து, அர்க்கியபாத்திமளித்து, நல்வரவு கூறி உபசரித்து ''அரசனே! இங்கு நீ எதை விரும்பி வந்திருக்கின்றாய்? சொல். தருவேன்'' என்றான்.

(தொடரும்)

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6—00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. 3—00 |
| 3. | திருப்புகழ்த்திரட்டு | ரூ. 1—00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றம் பாடல்களும்) | ரூ. 2—50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. 5—00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) | ரூ. 5—00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலே) | ரூ. 2—50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி முதற்பாகம் குன்றுதோருடல் | ரூ. 5—00 |
| 9. | மகாபாரதம் வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | அச்சில் |
| 10. | கந்தரநுபூதி (விரிவுரையுடன்) | ரூ. 2—00 |
| 11. | அறிவுரையமுது | ரூ. 0—50 |
| 12. | திருவாசகத்தேன் | ரூ. 0—50 |
| 13. | செந்தமிழ் இன்பம் | அச்சில் |
| 14. | சிந்தனைத்தேன் | ரூ. 0—50 |
| 15. | கிழவியும் குழவியும் | ரூ. 0—50 |
| 16. | அபிராமி | ரூ. 1—00 |
| 17. | அநசூயை | ரூ. 1—00 |